1st November 1958]

ணயை அவரால் பரிபாலிக்க முடியவில்லை என்பது அரசாங்கத்துக்குத் தெரியுமா ? அத்தகைய விதைப் பண்ணைகளுக்கும் மானேஜர் போட்டு போதுமான ஆட்களை நியமிக்க அரசாங்கம் ஏற்பாடு செய்யுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அது உண்மைதான். சிங்கிள் விதைப்பண்ணை டெமான்ஸ்ட்ரேட்டர் மேற்பார்வையில் சரியாக நடக்க வில்லை என்பதை அரசாங்கம் கவனித்து வருகிறது. அவற்றிற்கும் மானேஜர் தனியாகப் போட்டுக்கொண்டு வருகிறார்கள்.

### *Wages of Labourers employed in Seed Farms*

* 779 *Q.*—SRI A. GOVINDASAMY : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) சர்க்கார் விதைப் பண்ணைகளில் வேலை செய்யும் விவசாயத் தொழிலாளர்களுக்கு தினக் கூலி அளிக்கப்படுகிறதா அல்லது வாரக் கூலி அளிக்கப்படுகிறதா ?

(ஆ) விவசாயத் தொழிலாளர்களுக்கு பகல் உணவு அளிக்கப்படு கிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) The labourers employed in the State Seed Farms are paid daily wages.

(*b*) The answer is in the negative.

SRI A. GOVINDASAMY : செங்கல்பட்டு மாவட்டத்தில் வாரக்கூலி கொடுப்பது அரசாங்கத்துக்குத் தெரியுமா ? அப்படியானால் வாரக்கூலி கொடுக்குமிடங்களில் தினக்கூலி கொடுக்க அரசாங்கம் முயற்சிப்பார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதைப்பற்றி அரசாங் கத்தினிடம் தகவல் எதுவும் இல்லை.

SRI N. MARUDACHALAM : கோவையிலுள்ள விதைப்பண்ணையில் வேலை செய்யும் ஆட்களுக்கு இரண்டு வாரத்திற்கு ஒரு முறைதான் கூலி கொடுக்கிறார்கள். அதை வாராவாரம் கொடுக்க அரசாங்கம் முயற் சிக்குமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அது வேறு விஷயம், தனிக் கேள்வி போட்டால் பதில் சொல்லுகிறேன்.

SRI M. JAGANNATHAM : Are the Government aware of the fact that the daily wages paid to these workers are not even subsistance wages and wiil the Government consider the desirability of increasing their wages?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I may tell the hon. Member that the wages that are paid are assessed according to the conditions prevailing in the neighbouring areas.

SRI A. GOVINDASAMY: சர்க்கார் விதைப்பண்ணையில் வேலை செய்கிற விவசாயத் தொழிலாளருக்கு பகல் உணவு கொடுக்காத காரணத் தினால் நடவு காலங்களில் வேலை பாதிக்கப்பட்டு விடுகிறது என்பது அரசாங்கத்துக்குத் தெரியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதைப்பற்றி என்னிடம் தகவல் இல்லை. கனம் அங்கத்தினர் சொல்லுவதை விவசாய இலாகாவிற் குத் தெரிவித்து வேண்டிய நடவடிக்கை எடுத்துக்கொள்ளச் சொல்லு கிறேன்.